تاميلي

# இறை நேசச் செல்வர்:

# இமாம் ஜஃபர் சாதிக்

# الإمام جعفر الصادق عليه السلام



## நல்லடக்கம்

பின்னர் இமாமவர்களின் உடலை நல்லடக்கம் செய்வதற்கான வேலைகள் துவங்கின. இந்த ஆவயைில் மூசா காஸிம் பெரிதும் பங்கெடுத்துக் கொண்டார். “என் தந்தையார் 'இஹ்ராம்' கட்டும்போது உபயோகித்த இரண்டு ஆடைகளும் பயன்பட்டன. இவை எகிப்திலிருந்து வந்த வெள்ளை ஆடைகள். அவர்கள் போர்த்திக் கொண்டிருந்த ஆடை, அலி (ரலி) அவர்களிடமிருந்து கிடைத்த தலைப்பாகைத் துணி, நாற்பது தங்கக் காசுகளுக்கு வாங்கப்பட்ட யமன் நாட்டுத் துணி ஆகியவற்றை வைத்துக் கொண்டு 'கபன்' இடும் வேலையை நான் முடித்தேன். என் தந்தையாரின் உடலை நல்லடக்கம் செய்வதற்கு 400 தங்கக் காசுகள் செலவாயின!“ என்று சொல்கிறார் மூசா காஸிம். இமாம் ஜ.ஃ.பர் சாதிக் அவர்களின் மறைவுக்குப் பின்னர் 'இமாம்' என்ற பதவிக்கு வந்தவர் இவர்.

மதீனாவில் மரணமடைந்த இமாம் ஜ.ஃ.பர் சாதிக் அவர்கள் 'ஜன்னத் பகீவு' என்னும் இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். அவர்களின் தந்தையாரும் பாட்டனாரும் இதே இடத்தில்தான் நல்லடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள்.

**இன்னாலில்லாஹி வஇன்னாஇலைஹி ராஜிஊன்**

அல்லாஹ் எம் அனைவரையும் அவனுக்கு நெருக்கமான நல்லடியார்களுடன் சேர்துக் கொள்வானாக முஹம்மது (ஸல்) அவர்களின் குடும்பமாகிய அஹ்லுல் பைத்களை பின்பற்றி வாழகிருபை செய்வானாக.

ஆமீன்.

தன் மனத்தின் குரலுக்கு மதிப்புக் கொடுத்து நடக்கிறவன்தான் வழி கெட்டவன். இயன்றவரை உங்கள் உள்ளத்தைத் திருத்துங்கள். இந்த வேலையைச் செய்தால் நீங்கள்தான் நன்மையடைவீர்கள். இல்லாவிட்டால், வரக்கூடிய துன்பத்துக்கு நீங்கள்தான் பதில் சொல்ல வேண்டும்.

"உங்களுக்கு இறைவன் கொடுத்த இன்பதுன்பங்களை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். இந்த மனப்பான்மை இல்லாத மனிதனை உண்மை முஸ்லிம் என்று செல்ல முடியாது.

பெருமை கொள்ளாதீர்கள். அது இறைவனுக்கே உரித்தான ஒன்று. அதில் பங்கு பெறும் தகுதி மற்றவர்களுக்குக் கிடையாது. உங்களில் ஒருவர் மற்றொருவருக்கு மோசம் செய்யக்கூடாது. இது நல்லவர்களின் குணமல்ல."நமது வாணாளில் 68 ஆண்டுகளைக் கடந்து விட்ட இமாம் ஜ.்.பர் சாதிக் அவர்கள் அந்த அறையில் படுத்திருந்தார்கள். உலக வாழ்க்கை என்ற பிரயாணத்தில் இறுதிக் கட்டத்திற்கு அவர்கள் வந்து விட்டார்கள். அதைத் தொடர்ந்து புதியதொரு விரயாணம் தொடங்கப் போகிறது.

தம் வாணாளில் பெரும் பகுதியை ஆத்மிகத்துறைக்கு அர்ப்பணித்துவிட்டு அந்த ஞானவிளக்கு ஹிஜ்ரி 148 ரஜப் பிறை 15-ல், உறவினர்களையும் நண்பர்களையும் துக்கத்தில் ஆழ்த்திவிட்டு அணைந்தது!

அப்புறம் அந்த அறையில் ஒவ்வொரு நாளும் விளக்கு ஏற்றி வைத்தார்கள், உறவினர்கள். ஆனால் அணைந்த விளக்கினால் ஊற்பட்ட வெற்றிடத்தை இந்தப் புதிய விளக்கினால் நிரப்ப முடியவில்லை!

## நண்பர்களுக்கு

நண்பர்களும் உறவினர்களும் கூடியிருந்த அந்தச் சிறிய அறையில் இமாம் ஜ.்.பர் சாதிக் அவர்களின் அமைதியான குரல் பலவீனத்துடன் ஒலித்துக் கொண்டிருந்தது. இந்த நேரத்திலும் அவர்கள் தமது மதிப்பிற்குரிய நண்பர்களை மறக்கவில்லை. கூடியிருந்த நண்பர்களைப் பார்த்து இமாமவர்கள் கூறிய இறுதி அறிவுரைகள் தங்கத் தகட்டில் எழுதிவைக்கத் தகுந்தவை.

"நண்பர்களே! உங்கள் நாயனிடம் ஆரோக்கியத்தைக் கேளுங்கள். உங்கள் கண்ணியத்தையும் மன அமைதியையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு முன்னால் வாழ்ந்து மறைந்த நல்லவர்கள் எதையெல்லாம் தவிர்த்துக் கொண்டார்களோ அதையெல்லாம் தவிர்த்துக் கொள்ளுங்கள். இறைவனுக்கு முறைப்படி வழிபடுங்கள்.

"உங்கள் நாவுக்குக் கட்டுப்பாடு வைத்துக் கொள்ளுங்கள். நல்லதைத் தவிர்த்து வேறு எதற்கும் அதனை அசைக்காதீர்கள். யாரைப் பற்றியும் அவதூறு பேசாதீர்கள். இப்படி உங்கள் நாவை நீங்களே கட்டுப்படுத்திக் கொண்டால் அது உங்களுக்குத்தான் நல்லது.

"உங்கள் தேவைகளை இறைவனிடம் கேளுங்கள். இந்தப் பிரார்த்தனையை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் இப்படிப் பிரார்த்தனை செய்வதை இறைவன் விரும்புகிறான். நீங்கள் கேட்கும் பிரார்த்தனைகளை நிறைவேற்றித் தருவதாக வாக்குறுதியளிக்கிறான்.

"நண்பர்களே! இறைவனின் கட்டளைகளை முறைப்படி நிறைவேற்றுங்கள். உங்கள் மனத்தின் குரலுக்கு மதிப்புக் கொடுக்காதீர்கள். அது முரண் வழியில் இன்பம் காணக்கூடியது. எனவே அதன் குரலால் உங்களுக்கு எந்த நன்மையும் கிடையாது.

அவமானத்தைச் சிறிதாக மதிக்கிறவன், பிறருக்கு வருகிற அவமானத்தைப் பெரிதாக மதிப்பான்.

"**மகனே!** மற்றவர்களின் மானத்தை வாங்குகிறவன் தன்னுடைய மானத்தைக் காற்றில் பறக்க விட்டு விடுவான். துரோகத்துக்காக வாளை உருவியவன் அந்த வாளினாலேயே கொல்லப்படுவான். தன் சகோதரனுக்குக் குழி தோண்டுகிறவன் அந்தக் குழியிலேயே விழுந்து மடிவான். மூடர்களுடன் பழகுகிறவன் தாழ்த்தப்படுவான். அறிஞர்களுடன் பழகுகிறவன் உயர்த்தப்படுவான். தீய இடங்களில் பிரவேசிக்கிறவன் சந்தேகிக்கப்படுவான்.

"**மகனே!** உனக்கு எச்சரிக்கை செய்கிறேன். உனக்குத் தேவையில்லாத காரியத்தில் தலையிடாதே. இல்லையேல் உனக்கு அவமானம் ஏற்படும்.

"**மகனே!** உனக்குச் சாதகமாக இருந்தாலும், பாதகமாக இருந்தாலும் உண்மையைக் கூறிவிடு. திருக்குர்ஆனை ஓது. நல்லதை எடுத்துக் கூறி. கெட்டதைத் தடுத்து நிறுத்து... மீண்டும் எச்சரிக்கை செய்கிறேன், யாரைப் பற்றியும் புறம் பேசாதே. மக்களின் உள்ளங்களில் இது வெறுப்பை விதைத்துவிடும். மக்களிடமிருக்கிற தீமைகளை ஆராயாதே.

"**மகனே!** நீ சந்தித்து உரையாட நினைத்தால், நல்லவர்களைச் சந்தித்து உரையாடு தீயவர்களைச் சந்திக்காதே. இவர்கள் உறுதி வாய்ந்த பாறைக்கு நிகரானவர்கள். அந்தப் பாறைக்குள் ஈரம் இருக்காது. இவர்கள், காய்ந்து போன இலைகளுடன் கூடிய மரத்துக்கு ஒப்பானவர்கள்: வறண்டுபோன நிலத்துக்குச் சமமாணவர்கள்."

செய்யவில்லை. மரணத்தைத் திருப்தியோடு வரவேற்பவர்போல அவர்கள் காணப்பட்டார்கள். "நாங்கள் ஒரு செல்வத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். அது இப்போது எங்களுக்குக் கிடைக்காது. எங்கள் வாணாளெல்லாம் கழிந்த பிறகுதான் அது எங்களுக்குக் கிடைக்கும்" என்று ஒரு சமயம் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அந்தச் செல்வத்தை எதிர்பார்ப்பதுபோல அவர்களின் முகத்தில் அமைதியும் ஆர்வமும் பிரதிபலித்தன. தாம் உட்கொண்ட விஷம் பற்றி அவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். ஆனால் அவர்கள் அது பற்றித் தம் நண்பர்களிடம் ஒரு வார்த்தை பேசவில்லை!

அவர்களின் படுக்கையருகில் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார் மூசா காஸிம். தமது வாணாளில் 68 ஆண்டுகளைக் கடந்துவிட்ட இமாம் ஜாபர் சாதிக் அவர்கள் இந்தக் கட்டத்தில் தம் குமாரருக்குக் கூறிய அறிவுரைகள் சரித்திர முக்கியத்துவம் பெற்றவை.

'தாரீகெ அஸ்ரெ ஜாபரீ' என்ற நூலில் காணப்படுகிற அந்த அறிவுரைகளின் நேரடியாக தமிழ் மொழி பெயர்ப்பு அடுத்து இடம் பெறுகிறது.

"**மகனே!** என்னுடைய அறிவுரைகளை ஏற்றுக் கொள். என் வார்த்தைகளையும் பாதுகாத்துக் கொள். அவற்றைப் பாதுகாத்துக் கொண்டால் நீ வெற்றியோடு வாழ்வாய்: பாராட்டுக்குரிய நிலையில் மரணமடைவாய். மகனே! இறைவன் பங்கிட்டுக் கொடுத்ததை வைத்துத் திருப்தியடைகிறவன் யாருடைய கையையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. வசதி அற்றவர்களின் உடைமைகளுக்கு ஆசைப்படுகிறவன் வறிய நிலையில் மரணமடைவான். இறைவன் பங்கிட்டுக் கொடுத்ததை வைத்துத் திருப்தியடையாதவன், இறைவன் மீது சந்தேகம் கொண்டவனாவான். இறைவனின் தீர்ப்புக்கு யார் தான் குறை சொல்ல முடியும்? தனக்கு வருகிற

விஷத்தினால் எந்த ஆபத்தும் ஏற்படவில்லை. இந்தத் தடவை உடனுக்குடனே அவர்களுக்கு நெஞ்சுவலி ஏற்பட்டது“ என்று எழுதுகிறார். 'மனாஹிஜு' அன்வாரில் மஅரிபா' என்ற நூலின் ஆசிரியர்.

“இறைவன் வகுத்த நேரம் வந்து விட்டால் மரணம் என்பது ஒரு வினாடி முந்துவதுமில்லை: ஒரு வினாடி பிந்துவதுமில்லை“ என்ற திருக்குர்ஆனின் கருத்து எத்துணை பொருத்தமானது!

இந்த ஆசிரியர் ஒரு விஷயத்தில் கருத்து வேற்றுமை கொண்டிருக்கிறார். ஒரு சமயம் மன்சூர் ஏற்பாடு செய்திருந்த விருந்தில்தான் இப்படி விஷம் கலக்கப்பட்டதாம்: இந்த விஷத்தினால்தான் இமாமவர்கள் இறந்தார்களாம்!

“இமாமவர்களுக்கு விஷம் கொடுத்தவர் 'முஹம்மது பின் சுலைமான்” என்கிறது, 'தாரிகுல் அவலியா' என்ற நூல்.

“மதீனாவில் அதிகாரி ஒருவர் மூலம் விஷம் கொடுக்கப்பட்டது” என்று கூறுகிறார்கள், எழுத்தாளர்கள்.

எனவே எதன் மூலம், யார் மூலம் விஷம் கொடுக்கட்டது என்பதில் கருத்து வேற்றுமை இருந்தாலும், இமாம்வர்களின் மரணத்துக்கு விஷம்தான் காரணம் என்பதில் கருத்து வேற்றுமை கிடையாது.

## இறுதிப் போதனை

மதீனமா நகரில், இமாம் ஜாபர் சாதிக் அவர்களின் வீட்டில் நண்பர்கள் கூடியிருந்தார்கள். உறவினர்கள் அனைவரும் கவலை தோய்ந்த முகத்தோடு உட்கார்ந்திருந்தார்கள். கடுமையான நெஞ்சு வலியுடன் இமாமவர்கள் படுத்திருந்தார்கள். தாம் உட்கொண்டிருந்த விஷத்தை முறிப்பதற்கு அவர்கள் எந்தவித முயற்சியும்

தவாப்பிற்குப் பிறகு ஹரம் ஷரீபைவிட்டு வெளியேறலானார்கள். அவரைப் பின் தொடர்ந்தேன். வெளியே சென்று பார்த்தபோது பிரயாணத்தில் அவரை எந்நிலையில் கண்டிருந்தேனோ அதற்கு முற்றிலும் மாற்றமான ஆட்சியைக் கண்டேன். அவரை சுற்றி மிக்க உயர்ந்த அடிமைகள் நாற்புறமும் சூழ்ந்திருந்தனர். பலர் சலாம் கூறி அவருடைய சமூகத்தில் ஆஜராகிக் கொண்டிருந்தனர்.

எனக்குச் சமீபத்தில் நின்றிருந்த ஒரு மனிதரிடம் "இந்த மஹான் யார்?" என விசாரித்தேன். அதற்கு அவர், "இவர் ஹஜ்ரத் மூசா இப்னு ஜ.்.பர் (ரஹ்) ஆவார்கள்!" என்றார் (அதாவது ஹஜ்ரத் ஜ.்.பர் சாதிக் (ரலி) அவர்களின் மகனார் ஆவார்கள்.) இது எனக்கு ஆச்சரியமளித்தாலும் இப்படிப்பட்ட அற்புதங்கள் சைய்யிது பரம்பரையினரால்தான் சாதிக்க முடியும் என எண்ணிக்கொண்டேன். ஹஜ்ஜின் சிறப்பு - 359-364 பக்கம்.

பக்தாதிலிருந்து புறப்பட்டு வந்த ஒற்றன் சில நாட்கள் மதீனாவில் தங்கிச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இதற்கிடையில் இமாம் ஜாபர் சாதிக் அவர்களின் அன்பையும் பெற்றுக் கொண்டான். தன் மீது அவர்களுக்குச் சிறிதும் சந்தேகம் ஏற்படாதவாறு நடந்துகொண்டான். அவன் கொடுத்த அன்பளிப்புக்களை அவர்கள் பெற்றுக் பொண்டார்கள். 'ஒரு மனிதனால் மற்றொரு மனிதனுக்கு நன்மையோ தீமையோ செய்ய முடியாது' என்று உறுதியாக நம்பிய இமாமவர்கள் இப்படி நடந்து கொண்டதில் ஆச்சரியமில்லை. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஒற்றன், திராட்சைக் கனிகளில் விஷத்தைத் திணித்து அன்பளிப்பாகக் கொடுத்ததிலும் ஆச்சரியமில்லை.

இமாம்வர்கள் அந்த அன்பளிப்பைச் சாப்பிட்டு விட்டார்கள்!

"இமாம் சாதிக் அவர்களுக்கு இதற்கு முன் சில தடவைகள் விஷம் கொடுக்கப்பட்டது. அப்போதெல்லாம் அவர்களுக்கு

நீர் பொங்கி மேலே வர அவர் கையை நீட்டி அக்குவளையில் நீரை நிரப்பி எடுத்துக் கொண்டதை கண்டேன். முதற்கண் அவர் வுழூச் செய்தார்கள். நான்கு ரக்அத்தொழுதார்கள். இதற்குப் பின் மணலை ஒன்றாகக் குவித்து அதை அள்ளி அள்ளி குவளையில் போட்டு. அதைக் கலக்கிச் சாப்பிடலானார்கள்.

நான் அவருக்கருகில் சென்று சலாம் உரைத்தேன். அவர்களும் சலாமுக்கு பதிலளித்தார்கள். உடனே நான், “அல்லாஹ் தங்களுக்கு அளித்த இந்த நி.்.மத்தில் ஏதும் மீதமிருந்தால் எனக்கும் அளித்திடுவீராக!“ என வேண்டினேன். அதற்கவர்கள் “ஷகீக்! அல்லாஹ்வின் மறைமுகமான வெளிப்படையான எத்தனையோ நி.்.மத்துக்கள் நம்மீது இருந்து கொண்டிருக்கின்றன. அல்லாஹ்வின் மீது நன்னம்பிக்கையும், நன்மையைக் கொண்டே ஆதரவும் வைக்க வேண்டும்“ என்று கூறியவராக அந்தப் பாத்திரத்தை என்னிடம் கொடுத்து விட்டார்கள். நான் அதிலிருந்து உண்ண ஆரம்பித்தேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அதில் சர்க்கரை கலந்த பொரிமாவு இருந்தது. அதைவிட மணமும், சுவையும் கொண்ட உணவை என் வாழ்நாளில் ஒருபோதும் உண்டதில்லை. அதனை வயிறார உண்டேன். அந்த உணவின் பரக்கத்தினால் எனக்கும் பல நாட்கள் வரை பசியோ, தாகமோ உண்டாகவில்லை. இந்நிகழ்ச்சிக்குப் பிறகு, நான் அவரை மக்கா முகர்ரமா சென்றடையும் வரை எங்கும் பார்க்கவில்லை.

எங்களுடைய காபிலா மக்கா முகர்ரமாவை அடைந்த பிறகு 'குப்பத்துஷ் ஷராப்' என்னும் இடத்திற்கருகாமையில் நடுநிசி வேளையில் தொழுது கொண்டிருக்கும் நிலையில் அவரைக் கண்டேன். அவர் மிக்க உள்ளச்சத்துடன் அழுது கொண்டே விடியும் வரை தொழுது கொண்டிருந்தார்கள், சுப்ஹு சாதிக் ஆனதும் அவர் அதே இடத்தில் அமர்ந்து தஸ்பீஹ் ஓதுவதில் திளைத்து விட்டார். இதற்குப் பிறகு சுப்ஹுத் தொழுகையை நிறைவேற்றிவிட்டு பைத்துல்லாஹ்வை தவாப் செய்யலானார்கள்.

மன்னிப்புக் கேட்கலாம் என எண்னி அவர் தொழுது முடிக்கும் வரை காத்திருந்தேன். அவர் தொழுது சலாம் கொடுத்து முடித்து முன்னேறி நான் வருவதைக் கண்ட அவர், "ஷகீக் அவர்களே! இதனை ஓதுங்கள், وَإِنِّي لَغَفَّارٌ لِّمَن تَابَ وَآمَنَ وَعَمِلَ صَالِحًا ثُمَّ اهْتَدَىٰ ﴿٨٢﴾ طٰهٰ ٢٠

ஆயத்தின் கருத்து:- எனினும் எவன் வேதனைப்பட்டு பாவத்திலிருந்து விலகி விசுவாசங்கொண்டு, நற்கருமங்களைச் செய்து நேரான வழியில் நிலைத்து இருக்கின்றானோ, அவனை நான் மிக மன்னிப்பவனாகவே இருக்கின்றேன். (20 : 82) இந்த ஆயத்தை ஓதிவிட்டு அவர் அங்கிருந்து சென்று விட்டார்கள். நிச்சயம் இவர் அப்தால்களில் உள்ளவராக இருக்கவேண்டும். ஏனெனில் இவர் இருமுறை என் உள்ளத்தில் உதித்ததை எதிரொலித்து விட்டார்" என எண்ணியவனாக முன்னேறினேன்.

நாங்கள் ஜியாலா நகரை அடைந்த சமயம் இந்த இளைஞர் ஒரு கிணற்றுக்ருகாமையில் நின்றிருப்பதை தற்செயலாக கண்ணுற்றேன். அவருடைய கையில் ஒரு பெரிய குவளை இருந்தது. அதைக் கொண்டு கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்க முற்பட்டபோது அது தவறி கிணற்றில் விழுந்துவிட்டது. அவர் என்ன செய்யப்போகிறார் என்பதை கவனிக்கலானேன். அவர் தம் பார்வையை வானத்தின் பக்கம் உயர்த்தி ஒரு கவிதையைக் கூறினார்கள். அதன் கருத்தாவது : அல்லாஹ்வே! என் போஷகன் நீயே! நான் தாகித்திருக்கும்போது தண்ணீரைக் கொண்டு தாகம் தீர்க்கக் கூடியவன் நீதான்! நான் பசித்திருக்கும் போது எனக்கு உணவளிப்பவனும் நீயே.

இதற்குப்பிறகு அவர், "எனது இரட்ஷகனே! எனது எஜமானனே! என் வசம் இக்குவளையைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பதை நீ நன்கு அறிவாய். அதை நான் இழக்கும்படி செய்து விடாதே" என்று இறைஞ்சினார்கள். ஹஜ்ரத் ஷகீக் (ரஹ்) கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் மீது ஆணையாக, அந்த கிணற்று

**கூட்டத்தையும் அவர்களின் கலாச்சார அலங்காரங்களையும் கவனித்த வண்ணம் இருந்தேன். அவர்களுக்கிடையில் எனது பார்வை ஓர் அழகான வாலிபரின் மீது விழுந்தது. அவர் தமது உடையின் மீது ஒரு கம்பளியை போர்த்தியிருந்தார். கால்களில் செருப்பு அணிந்திருந்தார். அவர் ஜனங்களைவிட்டு ஒதுங்கி தனியாக அமர்ந்திருந்தார். அவ்வாலிபர் சூபியாக்களில் உள்ளவர் போல் தோற்றமளித்தார்.**

“ஒருக்கால் இவர் இப்புனித பயணத்தில் மற்றவர்களுக்கு சுமையாகி விடுவாரோ: இதுபற்றி அவரை அறிவுறுத்த வேண்டுமே!” என எண்ணியவனாய் அவருக்கு அருகில் சென்றேன். நான் அவரை நெருங்குவதைப் பார்த்ததும் அவர் “ஷகீக்,

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اجْتَنِبُوا كَثِيرًا مِّنَ الظَّنِّ إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ الحجرات ١٢

**(ஆயத்தின் கருத்து :) (வீண்) சந்தேகங்களிலிருந்து அனேகமாக நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். ஏனெனில் சில விஷயங்களில் வீணாகச் சந்தேகிப்பது பாவமாக இருக்கிறது. (சூரா ஹுஜ்ராத் : 12)** இவ்வசனத்தை ஓதிவிட்டு அங்கிருந்து செல்லலானார். என் மனதில், இதுவோ மிக்க ஆச்சரியமான விஷயமாக அல்லவா இருக்கிறது? இவ்வாலிபர் எனது பெயரையும் சொன்னார். அவர் என்னை இதற்கு முன் அறியவும் மாட்டார். என் உள்ளத்தில் இருந்ததையும் சொல்லிவிட்டுச் சென்றுவிட்டாரே? இவர் நிச்சயம் ஒரு மஹானாகத்தான் இருக்கவேண்டும். அவரிடம் சென்று என்னுடைய தவறான வீண் சந்தேகத்திற்கு மன்னிப்புக் கேட்கலாம் என எண்ணியவனாய் அவரைப் பின் தொடர்ந்து விரைந்தேன். ஆனால் அவர் என் பார்வையை விட்டு மறைந்து விட்டார். அவரைத் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை.

நாம் வாகிஸா நகரை அடைந்தபோது எதிர்பாராது அவரை பார்த்தேன். அவர் உடல் நடுங்க, கண்களிலிருந்து கண்ணீர் மல்கி வழிந்தோட, தொழுது கொண்டிருந்தார். அவர் இருந்த இடத்தை சமீபித்து அவரிடம் அந்த வீண் சந்தேகத்திற்காக நீர்

பார்த்திருக்கிறேன். அவையாவன தொழுகை, திலாவத், நோன்பு. அவர்கள் ஒலு இல்லாமல் ஹதீஸ்களை அறிவிக்க மாட்டார்கள். (தஹ்ஜீப்)

சையிதினா இமாம் ஜ.்.பர் சாதிக் (ரஹ்) அவர்கள் சொல்ல தாம் கேட்டதாக மஹான் சுப்யான் இப்னு தவ்ரீ (ரஹ்) கூறுகிறார்கள்: இக்காலத்தில் பாதுகாப்புக் கிடைப்பதாய் இருந்தால் பிரபல்யமற்று மறைந்து இருப்பதில் கிடைக்கும். அவ்வாறு அதிலும் இல்லையானால் (அதாவது அப்படி இருப்பதிலும் கிடைக்க வில்லையாயின்) பிறகு அதனை தனிமையில் தேடிப் பார்க்க வேண்டும். ஆனால் தனிமையானது பிரபல்யமற்று இருப்பதற்கு நிகர் ஆக முடியாது. அங்கும் கிடைக்கவில்லை என்றால் பிறகு மௌனமாக இருப்பதில் கிடைக்கும். ஆனால் மௌனம் என்பது தனிமைக்கு சமமானது அல்ல. அந்த மௌனத்திலும் கிடைக்கவில்லை என்றால் பிறகு ஸாலிஹான நலலோர்களின் அறிவுரைகளில் இருக்கிறது. தமது நப்ஸை தனித்திருக்க வைப்பவனே பாக்கியசாலியாவான்!

ஹஜ்ரத் ஜ.்.பர் (ரஹ்) அவர்கள் தமது தந்தையும், பாட்டனாரும் ரிவாயத்துச் செய்த நபி (ஸல்) அவர்களின் ஒரு ஹதீஸை அறிவிக்கின்றார்கள்: "எந்த மனிதரின் மீது அல்லாஹ்வின் ஏதேனுமோர் அருட்கொடை உண்டாகுமோ, அதற்காக அவர் அவசியம் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தட்டும்! எவருக்கு உணவு நெருக்கடி உண்டாகுமோ அவர் இஸ்தி.்.பாரை மிகையாக அதிகம் ஓதட்டும். மேலும் எவருக்கு ஏதேனுமொரு சங்கடம் உண்டாகுமோ அவர் 'லா ஹவ்லை' திக்ரு செய்யட்டும். (ரவ்ஜ்)

## மணலும் பொரிமாவானது !

ஹஜ்ரத் ஷகீக் பல்கீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் ஹிஜ்ரி 149-ம் வருடம் ஹஜ்ஜுக்காகச் சென்று கொண்டிருந்தேன். வழியில் காதிஸிய்யா என்னும் ஊரில் தங்கினேன். ஜனங்களின்

வாரும். ஆனால் இதிலிருந்து எதையும் உம்முடன் எடுத்துச் செல்லக்கூடாது" என்றார்கள். நான் அவர்களுடன் சேர்ந்து சாப்பிடலானேன். என் வாழ்நாளில் அதுபோன்ற சுவையானதை நான் ஒரு போதும் சாப்பிட்டதே இல்லை. அவை அலாதியான ருசியுள்ள திராட்சைகளாக இருந்தன. அதில் கொட்டையும் இருக்கவில்லை. நான் வயிறாற சாப்பிட்டேன். ஆனால் அந்தக் கூடையிலிருந்து ஒரு சிறிதும் குறையவில்லை. அதற்கு பிறகு அவர்கள் என்னிடம், "இந்த இரு துணிகளில் உமக்குப் பிடித்தமானதை எடுத்துக்கொள்ளவும்," என்றார்கள். நான் துணியின் அவசியம் எனக்கு இல்லை என்றேன். அவர்கள் துணி மாற்றிக் கொள்ளவேண்டி என்னை சற்று தள்ளிப்போகுமாறு வேண்டினார்கள். நான் மறைவில் ஒதுங்கிக் கொண்டதும் அவர்கள் ஒரு துணியை லுங்கியைப்போல் கட்டிக் கொண்டு மற்றதை மேலே போர்த்திக் கொண்டார்கள். முன்பு உடுத்தியிருந்த துண்டுத் துணிகளைக் கையில் ஏந்தியவராக மலையைவிட்டு கீழே இறங்கலானார்கள். நான் பின் தொடர்ந்தேன். அவர்கள் சபா மர்வாவுக்கிடையே சென்றபோது ஒரு யாசகன் "ரசூலுல்லாஹ்வின் பேரரே! இந்தத் துணிகளை எனக்கு அளியுங்கள். அல்லாஹுதஆலா உங்களுக்கு சுவர்க்க ஆடைகளை அளிப்பானாகவும்!" என்று கேட்டார். உடனே அவர்கள் அந்த இரு துணிகளையும் அவனுக்கு அளித்துவிட்டார்கள். நான் அந்த யாசகனை அணுகி "இவர்கள் யார்?" என விசாரித்தேன். அவன், "இவர்கள் ஸையிதினா இமாம் ஜ.்.பர் சாதிக் (ரஹ்) ஆவார்கள்" என்றான். நான் அவர்களிடம் ஏதேனும் நல்லுபதேசம் பெறலாம் என்ற எண்ணத்துடன் திரும்பி வந்தேன். ஆனால் அவர்களை எங்கும் காணவில்லை. (ரவ்ஜ்)

இவர்கள் சையிதினா இமாம் பாக்கர் (ரஹ்) அவர்களின் அருமை மகனார் ஆவார்கள். ஹஜ்ரத் இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறுவதாவது.: நான் பன்முறை அவர்களின் திருச் சமூகத்தில் ஆஜராகியிருக்கிறேன். நான் அவர்களை மூன்று வணக்கங்களில் ஏதேனும் ஒரு வணக்கத்தில் திளைத்திருப்பதை எப்பொழுதும்

## இமாமவர்களின் இறையச்சமும், வணக்கவளிபாடும்

மஹான் லைஸ் இப்னு ஸஅத் (ரஹ்) கூறுகிறார்கள் : ஹிஜ்ரி 113-ஆம் ஆண்டு நான் நடையாக ஹஜ்ஜுக்குச் சென்றேன். மக்கமாநகரை சென்றடைந்தபோது அஸருடைய வேளை சமீபித்திந்தது. அதுசமயம் நான் அபூகுபைஸ் மலையின் மீது ஏறினேன். அங்கு ஒருவர் உட்கார்ந்து துஆக் கேட்டுக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவர் யா ரப்பீ! யா ரப்பீ! என்று எண்ணற்ற முறை மூச்சுத் திணறிப்போகும் அளவு திக்ரு செய்தார். பிறகு அதேபோல் யா ரப்பாஹ்! ரப்பாஹ்! என்று உயிர் போகுமளவு தியானித்தார். பிறகு அவ்வாறே يَا اَللّٰهُ يَا اَللّٰهُ

என்று மூச்சடைக்க ஜபித்தார். பிறகு அது ஆபாலவே يَا حَيُّ يَا حَيُّ என்று இடைவிடாது ஓதினார். இன்னும் يَا رَحْمٰنُ يَا رَحْمٰنُ என்றும் பிறகு يَا رَحِيْمُ يَا رَحِيْمُ என்றும் உயிர் போகுமளவு கூறிக் கொண்டிருந்தார். அதற்கு பிறகு அவ்வாறே ஏழுமுறை يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ என்றும் உயிர் ஊசலாடும் வரை திக்ரு செய்தார். பின்னர் அவர்கள், "யா அல்லாஹ்! என் மனம் திராட்சையை விரும்புகிறது. எனக்கு அதனைக் கொடுத்தருள். மேலும் நான் உடுத்தியுள்ள துண்டுத் துணிகள் கந்தையாகி விட்டன" என்று பிராா்த்தித்தார்கள்.

ஹஜ்ரத் லைஸ் (ரஹ்) கூறுகிறார்கள்:- அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் துஆவை சொல்லி முடிக்கவுமில்லை: திராட்சை நிரம்பிய ஒரு கூடை அவருக்கு முன்பாக வைக்கப் பட்டிருப்பதை நான் கண்டேன். இப்பூவுலகெங்கும் திராட்சை விளையாத பருவம் அது. மேலும் இரு துண்டுத் துணிகளும் அதில் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டேன். அவர்கள் திராட்சையை சாப்பிட நாடியபோது நான் முன்னேறி "அதில் எனக்கும் பங்கு இருக்கிறது" என்றேன். அவர்கள் எவ்வாறு எனக்கேட்க, தாங்கள் துஆச் செய்யும்போது நானும் ஆமீன்! ஆமீன்! எனக் கூறிக் கொண்டிருந்தேன் என்று சொன்னேன். உடனே அவர்கள் "உண்ண

கொள்கைகளை விளக்கக் கூடிய இந்நூல் பக்தாத் நூல் நிலையத்தில் இருக்கிறது. ஷஹ்ரிஸ்தானி என்பவர் அதை நகல் செய்து வைத்திருக்கிறார்.

மேற்குறிப்பிட்ட நூல்களைத் தவிர்த்து இன்னும் பல சிறிய நூல்களை இமாமவர்கள் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. யுத்தத்தில் வெற்றியடைந்தவர்களுக்குக் கிடைக்கூடிய பொருள் பற்றி ஒரு நூல், நபிப் பரம்பரையினர்மீது அன்பு செலுத்துவது பற்றி வேறொரு நூல், மெய்ஞ்ஞானிகளின் வழியைப்பற்றிய பிறிதொரு நூல்-இப்படி அவர்கள் நிறைய எழுதி இருக்கிறார்கள். ஏறத்தாழ 500 நூல்கள் எழுதிருப்பதாக வரலாறு குறிப்பிடுகிறது.

ஆதாரம் :

இமாம் ஜ.்.பர் சாதிக
மௌவி அப்துல் வஹ்ஹாப் பாகவி



முபள்ளல்' என்று பெயரிடப்பட்டிருக்கிறது. நாத்திகர்கள் எழுப்பிய வினாக்களும் அவற்றிற்குரிய விடைகளும் இந்த நூலில் இடம் பெற்றிருக்கின்றன. இயக்கும் ஆற்றல் இல்லாமல் எதுவும் இயங்க முடியாது-படைக்கிறவன் இல்லாமல் எந்தப் பொருளும் தோன்றியிருக்க முடியாது என்ற உண்மை இந்த நூலில் பெரிதும் வலியுறுத்தப்பட்டிருக்கின்றன.

இந்த நூலுக்கு முல்லா முஹம்மது பாகிர் கொடுத்த மொழி பெயர்ப்பு பிரசித்தம் வாய்ந்தது.

### நான்கு

இமாம் சாதிக் அவர்களால் எழுதப்பட்டு முபள்ளல் பின் உமர் மூலம் உலகிற்கு கிடைத்த நூல்களில் 'கிதாபுல் இஹ்லீலஜ்' என்பது மற்றொன்று. 'பிஹாருல் அன்வார்' என்ற நூலில் இது காணப்படுகிறதாம். 'கிதாபுல் இஹ்லீலஜ்' என்ற இந்நூல் என் பார்வைக்குக் கிடைக்காதலால், அதில் இமாமவர்கள் என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதை என்னால் விளக்க முடியவில்லை. இமாம் ஜ:ஃபர் சாதிக எனும் நூல் எழுதிய மௌலவி அப்துல் வஹ்ஹாப் பாகவி.

### ஐந்து

'மிஸ்பாஹுஷ் ஷரீஆவ மிப்தாஹுல் ஹகீகா' - இமாம் சாதிக் அவர்களால் எழுதப்பட்ட நூல்களில் இதுவும் ஒன்று. பண்புகள், அறிவுரைகள், வாழ்க்கை முறைகள் அடங்கிய இந்நூலை இமாம் ஜ:ஃபர் சாதிக் அவர்கள்தான் எழுதினார்கள் என்று நிச்சயமாக சொல்ல முடியாது. என்றாலும் அவர்களின் பெயருடனேயே இது விளங்கி வருகிறது.

### ஆறு

இமாம் ஜ:ஃபர் சாதிக் அவர்கள் தமது ஞானத்துக்கு விளக்கம் கொடுப்பதுபோல் ஒரு நூல் எழுதியிருக்கிறார்கள். இஸ்லாத்தின்

பலவற்றையும் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். அப்போதைய அறிஞர்கள் அனைவரையும்விட இமாம் சாதிக் அவர்களே அதிகமான நூல்களை எழுதியிருக்கிறார்கள் என்பது இங்கு குறிப்பிடத் தகுந்தது.

படிப்படியாக வளர்ந்து கொண்டிருந்த இஸ்லாமிய மக்களுக்கு இமாமவர்கள் எழுதிய நூல்கள் பெரிதும் பயன்பட்டன.

அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் அத்தனையும் நமக்குக் கிடைக்காவிட்டாலும், அவற்றைப் பற்றிய விவரம் வரலாற்று நூல்களில் காணப்படுகிறது.

**ஒன்று**

இஸ்லாமியச் சட்டங்களை விளக்கி இமாமவர்கள் ஒரு நூல் எழுதினார்கள். 'வுழூ', குளியல், தொழுகை, 'ஸகாத்', திருமணம், விவாகரத்து முதலிய செய்திகள் இந்தச் சிறிய நூலில் அடங்கியிருந்தன.

**இரண்டு**

எகிப்தில் பதவி வகித்த மாலிக் அஷ்தர் என்பவருக்கு அலி ஹஸ்ரத் எழுதிய அரசியல் கடிதம் இமாம் ஜ.'.பர் சாதிக் அவர்களிடமிருந்தே நமக்குக் கிடைத்திருக்கறது. அரசியல் நிர்வாகத்திலுள்ள நெளிவுகளை எல்லாம் பளிச்சென்று விளக்கக்கூடிய இக்கடிதம் 'மகனுக்கு' என்ற நூலில் விரிவாக மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

**மூன்று**

இமாம் ஜ.'.பர் சாதிக் அவர்களிடமிருந்து நமக்குக் கிடைத்த நூல்களில் 'தவ்ஹீத்' என்பது மற்றொன்று. ஏகத்துவம் என்பது இதன் பொருள். இந்த நூல் முபள்ளல் பின் உமர் என்பவர் மூலம் உலகத்திற்கு கிடைத்திருப்பதால், இதற்குத் 'தவ்ஹீத்

சு.ஃப்யான் சவ்ரீ அவர்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டு விட்டது. பெருமானாரின் வழித் தோன்றலே மக்களிடமிருந்து கிடைக்கும் கண்ணியத்திற்கு .செல்வமே காரணமாகும். ஆனால் செல்வம் யாரிடமும் நிலைத்து நிற்பதில்லையே? செல்வம் நிலைத்து நிற்க வேண்டுமா? இறைவனைப் பாராட்டிக் கொன்டே இருங்கள்., அவனுக்கு நன்றி செலத்திக் கொன்டே இருங்கள். "நீங்கள் நன்றி செலுத்தினால் நான் உங்களுக்கு அதிகமாகக் கொடுப்பேன் என்று இறைவனே குறிப்பிட்டிருக்கிறான். "வருமானம் தடைப்பட்டு நிற்கிறதா? இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். "உங்கள் நாயனிடம் மன்னிப்புக் கேளுங்கள். அவன் மன்னித்தருளக் கூடியவன். உங்களுக்காக அவன் வானத்திலிருந்து மழையைப் பொழிய வைப்பவன். செல்வத்தையும் மக்களையும் கொடுத்து உதவி செய்வான்... என்று அவனே குறிப்பிட்டிருக்கிறான். சு.ஃப்யான்! அதிகாரிகளிடமிருந்தோ மற்றவர்களிடமிருந்தோ உங்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் அதற்காகப் பொங்கியெழுந்து விடாதீர்கள். "தீமையைத் தடுக்கும் ஆற்றலும் நன்மையை இழுத்து வரும் சக்தியும் இறைவனைத் தவிர்த்து வேறு யாருக்கும் கிடையாது" என்று அதிகமாகச் சொல்லிக் கொள்ளுங்கள். (இந்தக் கருத்துக்குரிய அரபிச் சொற்றொடர்: "லாஹுவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்") இது மகிழ்ச்சிக்குத் திறவுகோல் போன்றது...

## எழுதிய நூல்கள்

பொதுவாகச் சொல்வதானால், இமாமவர்களின் காலத்தை "அறிவுக் காலம் என்று குறிப்பிடலாம். அப்போது அரசியல் வட்டாரத்தில் விரும்பத்தகாத பல விளைவுகள் தோன்றியது உண்மைதான். என்றாலும் அப்போது அரசாங்கமே முன்னால் நின்று அறிவுக்காகப் பாடுபட்டது. அப்போதைய அறிவு வளர்ச்சிக்கு உரமிட்ட பெருமை இமாம் ஜ.ஃபர் சாதிக் அவர்களையே சேருகிறது. பேச்சுக்களால் மட்டும்தான் அவர்கள் அறிவைப் பரப்பினார்கள் என்று கூறமுடியாது. பயன் தரக்கூடிய நூல்கள்

“மனிதனுக்குத் தேவையான உணவையும் வருமானத்தையும் இறைவன் பங்கிட்டுக் கொடுக்கிறான். ஒவ்வொரு மனிதனும் தெரிந்தோ தெரியாமலோ இறைவனிடமிருந்தே எதையும் எதிர் பார்க்க வேண்டியிருக்கிறது. உங்களுக்கு இறைவன் பங்கிட்டுக் கொடுத்ததை வைத்துத் திருப்தியோடு வாழுங்கள். அப்போது நீங்கள் செல்வந்தராகி விடுவீர்கள். நீங்கள் வேறு யாரிடமும் உதவி கேட்க வேண்டிய அவசியம் ஏற்படாது.

“பக்கத்து வீட்டுக்காரர்களிடம் நல்ல முறையில் தொடர்பு வைத்துக்கொள்ளுங்கள். அப்போதுதான் நீங்கள் உண்மை முஸ்லிமாக முடியும். தீயவர்களுடன் பழகாதீர்கள். அவர்களின் தவறுகள் உங்கள் நேர்மையைக் கொன்றுவிடக்கூடும்.

“நீங்கள் எந்தக் காரியத்தைச் செய்வதானலும், இறை வழி பாடு உள்ளவர்களிடம் ஆலோசனை கேட்டுக் கொள்ளுங்கள். உங்களுக்குத் தெரியாத தவறுகளை அவர்கள் சுட்டிக்காட்டக் கூடும்.” இப்படிக் கூறிய இமாம் சாதிக் அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். “இன்னும் சொல்லுங்கள்., சொல்லிக் கொண்டேயிருங்கள். அறிவுரை கேட்பதற்காகவே இங்கு நான் வந்திருக்கிறேன்!” இமாமவர்களின் குரல் மீண்டும் அமைதியாக ஒலித்தது. சுஃப்யான்! தீயவர்களிடம் பழகாதீர்கள் என்று சொன்னேனல்லவா? தீயவர்களிடம் பழகுகிறவர்கள் என்றாகிலும் ஒருநாள் குறுக்கு வழியில் இறங்கி விடுவார்கள். தீய இடங்களுக்குச் செல்கிறவர்கள் என்றாவது ஒருநாள் சந்தேகிக்கப்படுவார்கள். கட்டுப்பாடு இல்லாமல் மனத்தில் தோன்றுவதை எல்லாம் பேசிக்கொண்டிருப்பார்கள். பின்னர் பெரிதும் வருந்த வேண்டிய நிலை ஏற்படும். இவற்றில் எப்போதும் நீங்கள் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுங்கள். “குடும்பவலிமை இல்லாமல் ஒருவன் கண்ணியத்தை எதிர்பார்த்தால், அதிகாரம் இல்லாமல் பெருமையை எதிர்பார்த்தால் அவனால் எதையும் அடைய முடியாது.

நபித் தோழர்களின் பண்புக்கு உவமானம் வேண்டுமா? நீங்கள் தேடி எடுக்க வேண்டிய நூல் ஹஸன் பஸ்ரீயின் வரலாறு. அவர்கள் எதைப் பற்றிப் பேசினார்கள் என்று நினைக்கிறீர்கள்? உள்ளத்தைச் சிதறடிக்கும் உணர்வுகள், செயல்திறனுக்கு குழிபறிக்கும் உணர்வுகள், துப்புக் காணமுடியாத ஆசையுணர்வுகள் ஆகியவற்றைப் பற்றியே அவர்கள் அனேகமாகப் பேசினார்கள்.

## சு.ஃப்யான் சவ்ரீ

இமாம் ஜ.ஃபர் சாதிக் அவர்களின் பேச்சுக்களிலிருந்து தம் அறிவை வளர்த்துக் கொண்டவர்களில் சு.ஃப்யான் சவ்ரீ மற்றொருவர்.

இமாமவர்கள் சு.ஃப்யான் சவ்ரீக்கு கூறிய அறிவுரைகள் இங்கு நம் கவனத்திற்குரியவை. "எனக்கு ஏதேனும் அறிவுரை கூறுங்கள்!" என்று கேட்கப்பட்டபோது இமாமவர்கள் பேசினார்கள்.

"சு.ஃப்யான்! பொய்யுரைப்பவனிடம் மனிதத்தன்மை கிடையாது. பொறாமை நெஞ்சம் படைத்தவனுக்கு வாழ்வில் அமைதி கிடையாது. தீய குணம் படைத்தவன் சமுதாயத்தில் வெற்றியடைய முடியாது. அதிகாரத்தில் உட்கார்ந்திருப் பவர்களிடம் சகோதரத்துவத்தை எதிர்பார்க்கமுடியாது. என்று கூறி நிறுத்த உற்றுக் கவனித்துக் கொண்டிருந்த, சு.ஃப்யான் சவ்ரீ "சொல்லுங்கள், எவ்வளவு அதிகமாகச் சொல்ல முடியுமோ அவ்வளவு அதிகமாகச் சொல்லுங்கள்" என்றார்கள். இமாம் ஜ.ஃபர் சாதிக் அவர்கள் மீண்டும் பேச ஆரம்பித்தார்கள்.

சு.ஃப்யான்! இறைவன் தடை செய்திருக்கின்ற காரியங்களை விட்டு ஒதுங்கி வாழ்க்கையை நடத்துங்கள். அப்போது நீங்கள் இறை பக்தராகி விடுவீர்கள் தப்பான செயல்களில் ஈடுபடுகின்றவர்களுக்கு இறை வணக்கத்தில் இனிமை கிடைக்காது. எனவே அவர்களால் முறைப்படி இறைவனை வணங்க முடியாது.

அவர்களைப் பக்தர்களில் சிறந்தவர் என்று குறிப்பிடலாம். இறையச்சமுள்ள துறவிகளில் ஜ∴பர் சாதிக் அவர்கள் தனித்து விளங்குகிறார்கள்.

## இமாம் ஷாபியீ

இவர்களின் முழுப் பெயர்: முஹம்மது பின் இத்ரீஸ் பின் அப்பாஸ். ஷாபியீ முஹம்மது என்றும், இத்ரீஸ் ஷாபியீ என்றும் இவர்கள், அழைக்கப்படுவதுண்டு. இமாம் அபூஹனிபா (ரஹ்) அவர்கள் இறந்த அதே நாளில் இவர்கள் மதீனாவில் பிறந்தார்கள். ஹிஜ்ரி 151லிருந்து 204வரை வாழ்ந்த இவர்களையும் இமாம் சாதிக் அவர்களின் மாணவர் என்றே குறிப்பிட வேண்டும். இமாம் சாதிக் அவர்களை இமாம் ஷாபியீ கண்டதில்லை. என்றாலும் இமாம் சாதிக் அவர்களின் மாணவர்களிடமிருந்து அறிவு பெற்றிருக்கிறார்கள். இமாம் ஷாபியீ அவர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுத்தவர் முஹம்மது பின் ஹஸன் ஷைபானி. இமாம் அபூஹனிபா, இமாம் மாலிக் ஆகியோரிடமிருந்து இவர்கள் அறிவைப் பெற்றிருக்கிறார்கள். இமாம் அபூஹனிபா அவர்களை இமாம் ஷாபியீ அவர்கள் உயர்த்தி மதித்ததற்கும் இதுவே காரணமாகும்.

## ஹஸன் பஸ்ரீ

இமாம் ஜ∴பர் சாதிக் அவர்களின் மாணவர்களில் ஒருவரான ஹஸன் பஸ்ரீ, மேலே நான் குறிப்பிட்டதுபோல், பஸ்ராவில் தத்துவப் பாடசாலையை நிறுவிய பெருமைக்குரியவர். இவர்களைச் சிலர் இமாம் ஹஸன் பஸ்ரீ என்றும், வேறு சிலர் அறிஞர் ஹஸன் என்றும் குறிப்பிடுகிறார்கள். ஹிஜ்ரி 110 வரை வாழ்ந்த ஹஸன் பஸ்ரீ, இமாம் ஜ∴பர் சாதிக் அவர்களின் பேச்சுக்களை ஊன்றிக் கவனித்தவர்களில் முக்கியமான ஒருவர். இவர்களைப்பற்றி இமாம் கஸ்ஸாலி அவர்கள் இப்படி குறிப்பிடுகிறார்கள்: "...திருத்தூதர்களைப் போல் பேசிய ஒரு மனிதரைப் பார்க்க வேண்டுமா? ஹஸன் பஸ்ரீயின் வார்த்தைகளைப் படித்துப்பாருங்கள்.

இமாம் ஜ.்.பர் சாதிக் அவர்கள் பிறந்த அதே ஆண்டில்தான் இமாம் அபூஹனிபா அவர்களும் பிறந்தார்கள். ஹிஜ்ரி 80லிருந்து 151வரை வாழ்ந்த இமாம் அபூஹனிபா அவர்கள் இமாம் சாதிக் அவர்களின் மாணவர்களில் மிக முக்கியமானவர்கள் இமாம் சாதிக் அவர்களின் பாடசாலையில் கல்வி பயின்றவர்கள் அனைவரிலும் இமாம் அபூஹனிபா அவர்கள் பிற் காலத்தில் மிகப் பெரும் இமாமாகத்திகழ்ந்தார்கள். அப்பாசிய அரசாங்கத்தின் பிரதம நீதிபதியான அபூ யூசு.்.பும், இமாம் அபூஹனீபாவும் சேர்ந்து நடத்திய ஹனபிப் பாடசாலை இங்கு குறிப்பிடத் தகுந்தது. இஸ்லாமிய சட்டங்களுக்குப் பகுத்தறிவு ரீதியான விளக்கத்தைக் கொடுத்த இந்தப் பாடசாலை, அவற்றிற்கு முறையான அமைப்பையும் கொடுத்தது. "ஆசிரியரும் மாணவனும்" என்ற பெயரில் இமாம் அபூஹனிபா எழுதிய நூல் மிகப் பிரசித்தம் வாய்ந்தது. அவர்களின் திறமைக்கும் தெளிவுக்கும் இந்த நூல் சரியான எடுத்துக் காட்டாகும்.

## இமாம் மாலிக்

மாலிக் பின் அனஸ் (ரழி) என்ற பெயரைக் கொண்ட இவர்கள் இமாம் மாலிக் என அழைக்கப்படுகிறார்கள். ஹிஜ்ரி 95-லிருந்து 179-வரை வாழ்ந்த இவர்கள் மதினா வாசிகளில் ஒருவர்., இமாம் சாதிக் அவர்களிடம் மாணவனாக இருக்கும் வாய்ப்புப் பெற்றவர்களில் குறிப்பிடத் தகுந்தவர். இமாம் மாலிக் அவர்கள் இமாம் சாதிக் அவர்களைப் பற்றி இப்படிக் குறிப்பிடுகிறார்கள். "அறிவிலும் வணக்கத்திலும் ஒழுக்கத்திலும் ஜ.்.பர் சாதிக் அவர்களைவிடச் சிறந்த ஒருவரை எந்த மனிதனின் உள்ளத்திலும் கற்பனைத் தோற்றம் கூட உருவாக முடியாது. ஜ.்.பர் சாதிக் பற்றி யாரும் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால் அவர்களைவிடச் சிறந்த ஒருவரைப் பற்றி யாரும் கேள்விப்பட்டிருக்கவே முடியாது. அவர்கள் நோன்பு பிடித்தார்கள்: நின்று வணங்கினார்கள்., இறைசிந்தனையில் ஈடுபட்டார்கள். இந்த மூன்றில் ஏதேனும் ஒன்றை அவர்கள் எப்போதும் செய்து கொண்டிருந்தார்கள். எனவே

கலீனி என்ற அந்தப் பாரசீக நண்பரும் இமாம் முஹம்மது பாகிர் அவர்களும் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தார்கள். "இன்றிரவு நான் ஒரு கனவு கன்டேன்" என்று இமாம் முஹம்மது பாகிர் அவர்கள் கூறினார்கள்.

அதனை நான் தெரிந்து கொள்ளலாம் என்றால் தயவு செய்து என்னிடம் கூறுங்கள். கண்ட கனவுகளைச் சிலர் வெளியில் கூறுவதில்லை, அதனால்தான் தயக்கத்துடன் கேட்கிறேன். "உம்மிடம் சொல்லத்தான் போகிறேன். இல்லாவிட்டால், இந்த பேச்சை நான் ஆரம்பித்திருக்க வேண்டியதில்லையே! என்ற இமாமவர்கள் கண்ட கனவை நினைவுபடுத்திக் கொள்வதுபோல். சிறிது நேரம் சிந்தனை செய்தார்கள். பிறகு இமாமவர்கள் தணிந்த குரலில் பேசினார்கள். "வானத்தைத் தொட்டுக் கொண்டிருக்கிறது என்று கூறுமளவிற்கு மலை கண்ணெட்டிய தூரம் வரை உயர்து நிற்கிறது. அதனுடைய உச்சியில் நான் தனியாக அமர்ந்திருந்தேன். நாலாபுறமிருந்தும் திரண்டு வரும் மக்கள் என் பக்கம் நெருங்குகிறார்கள். இப்படி திரண்ட மக்கள் மலையில் ஏறியதும் அந்த மலை இன்னும் உயரமாக வளர்ந்துவிடுகிறது. இப்படி ஐந்து தடவை நடைபெறுகிறது." இமாமவர்கள் சொல்லி முடிக்க கலீனி அவர்கள் தொடர்ந்தார்.

இந்தக் கனவுக்கும் இமாமவர்களின் மரணத்துக்கும் சம்பந்தமுண்டா என்பதை அப்போது நான் உணர வில்லை. ஆனால் இப்போது நான் உணர்கிறேன். இமாமவர்கள் கனவு கண்ட ஐந்தாவது நாள் மரணமடைந்திருக்கிறார்கள்.

## இமாம் ஸ.'.பர் சாதிக் அவர்களைப் பற்றி அறிஞர் பெருமக்கள்

நு.'.மான் பின் ஸாபித் இவர்கள் "இமாம் அபூஹனீபா என்று அழைக்கப்படுகிறார்கள். "இமாமுல் அ.'.லம் என்றும் குறிப்பிடுவதுண்டு. "மிகப் பெரும் தலைவர்." என்பது இதன் பொருள்.

“பிறகு அமைதியான குரலில் எனக்குக் கூறினார்கள். “மகனே! தோற்றம் தருபவை அத்தனையும் அழியக்கூடியவை. இந்த உலகமும் ஒரு நாள் அழியத்தான் போகிறது. அழியக்கூடிய இந்த உலகத்தை விட்டு இன்றிரவு நான் புறப்படப் போகிறேன். இதே இரவில்தான் பெருமானார் (ஸல்) அவர்கள் இந்த பிரயாணத்தை மேற்கொண்டார்கள். என் தந்தையார் அவர்களும் இதே இரவில்தான் இறைவனைப் பார்க்கப் புறப்பட்டார்கள்...“நான் திகைத்துபோய் உட்கார்ந்திருந்தேன்.“

“காமில் இப்னு அதீர் என்ற நூலைத் துணையாகக்கொண்டு இங்கு விரிந்திருக்கும் இந்தச் சம்பவம், திங்களிரவு இஷாத் தொழுகைக்குப் பிறகு நிகழ்ந்ததாகவே தெரிகிறது.

அதே நேரத்தில் மதீனாவுக்கு வெளியில் யாரோ ஒரு பிரயாணி தம் வேலையை மேற்கொண்டிருந்தார். நடந்து நடந்து களைத்துப்போன அவர் அங்கிருந்த பேரீச்சை மரத்தடியில் சிறிது நேரம் கண்ணயர்ந்தார். சொல்லி வைத்தாற் போல் கனவு விரிந்தது.

பழுத்த வயோதிபர் ஒருவர் எதிரில் வந்து நிற்கிறார். இவ்வளவு அவசரமாக எங்கு போய்க் கொண்டிருக்கிறாய்? நீ போகிற காரியம் அவ்வளவு முக்கியமானதா? அதைவிட முக்கியமான காரியம் மதீனாவில் இருக்கிறது. திரும்பிப்போ அங்கு போய் பிரேதப் பிரார்த்தனையில் கலந்து கொள். “ஜன்னதுல் பகீஉ“ வில் குளிப்பாட்டிக் கொண்டிருக்கிறார்கள். இமாம் முஹம்மது பாகிர் அவர்கள் இறந்துவிட்ட செய்தி உனக்குத் தெரியாதா? கனவில் தோன்றிய பெரியார் மறைவதற்கு முன்பே தூங்கியவர் விழித்துக்கொண்டார். நேராக மதீனாவுக்கு வந்து பிரார்த்தனையில் கலந்து கொண்ட அந்த மனிதர் நடந்ததை மற்றவர்களிடம் கூறினார்.

இமாம் முகம்மது பாகிர் அவர்களுடன் நன்கு பழகிய அந்த மனிதர் புதுச்செய்தி ஒன்றையும் மக்களிடம் கூறினார். அது அவர்களுக்கு மட்டுமல்ல. நமக்கும் புதியதுதான்.

கொடுக்கப்பட்டது. எனவே இமாம் முஹம்மது பாகிர் அவர்கள் மதீனமா நகரில் விஷம் கொடுத்து கொல்லப்பட்டார்கள்.

அவர்களின் உடல் "ஜன்னதுல் பகீஉ" எனும் இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. இதே இடத்தில்தான் இமாம் ஸைனுல் ஆப்தீன் அவர்கள் ஏறக்குறையை இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் னர் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

இறக்கும்போது இமாம் முஹம்மது பாகிர் அவர்களின் வயது ஏறத்தாழ 57. இறந்த காலம்: ஹிஜ்ரி 114, துல்ஹஜ் மாதம், திங்களிரவு, பிறை7. இந்தக் கட்டத்தில் இமாம் ஜஃபர் சாதிக் அவர்களுக்கு முப்பத்தி மூன்றாம் வயது நிரம்பியிருந்தது. இமாமவர்கள் ஹிஜ்ரி 113-ல் காலமானதாக குறிப்பிடுகிறார் அமீர் அலி. "A Short History of Saracens" என்ற பெயரில் அவர் எழுதியிருக்கும் நூல் உலகப் பிரசித்தம் வாய்ந்தது.

தம் தந்தையாரின் மறைவு குறித்து இமாம் ஜஃபர் சாதிக் அவர்கள் உருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். "என் தந்தையார் மரணமடைந்த அன்றிரவு நான் அவர்களை நெருங்கினேன். அவர்களின் அருகில் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றிற்று. அவர்கள் என்னைக்கண்டதும், சைக்கினை மூலம் அந்த இடத்தைவிட்டுப் போகச் சொன்னார்கள். ஒருக்கால் அவர்கள் யாரிடமேனும் ரகசியமாக ஏதேனும் பேச விரும்பியிருக்கலாம். அவர்கள் பேசிக்கொள்ளும் ரகசியம் எனக்குத் தெரியக்கூடாது என்று என்னியிருக்கலாம். அல்லது, தனிமையில் உட்கார்ந்து இறைச் சிந்தனையில் ஈடுபட நினைத்துதிருக்கலாம் எனக்கருதி நான் உடனே வெளி யேறி விட்டேன்.

"என் மனதிற்குள் ஏதோ ஒன்று குடைந்து கொண்டிருந்தது. எனவே அவர்களை மீண்டும் நெருங்கினேன். அவர்களின் அருகில் உட்கார்ந்தேன். என்னை அவர்கள் சிறிது நேரம் இமைக்காமல் பார்த்தார்கள்.

"வீட்டிலுள்ளவர்களுக்கு எதையும் வைக்காமல் அனைத்தையும் அவர்கள் தர்மம் செய்துவிடுவார்கள்! என்று ஹய்யாஜ் பின் மிக்தாம் கூறுவது எத்தனை பொருத்தம்!

## தந்தையாரின் மறைவு

இமாம் முஹம்மது பாகிர் அவர்களின் மறைவு,இமாம் ஜ.்.பர் சாதிக் அவர்களது வரலாற்றில் மிக முக்கியமான தொரு எல்லையாகும். இதுவரை தந்தையாரின் துணையுடன் வளர்ந்த ஜ.்.பர் சாதிக் அவர்களின் வாழ்வில் இந்தக் கட்டத்தில் புதியதொரு திருப்பம் ஏற்படுகிறது. தந்தையார் இறந்ததும் அவர்கள் வகித்த பதவி ஜ.்.பர் சாதிக் அவர்களுக்கு கொடுக்கப்படுகறது. அன்றிலிருந்துதான் அவர்கள் "இமாம் ஜ.்.பர் சாதிக்" என்று அழைக்கப்பட்டார்கள். இதுவரை அமைதியாக இயங்கிகொண்டிருந்த ஜ.்.பர் சாதிக் அவர்கள், தாம் ஏற்றிருந்த பொறுப்புக்குத் தக்கவாறு இப்போது செயலாற்றத் துவங்கினார்கள்.

இமாம் ஜ.்.பர் சாதிக் அவர்கள் சம்பந்தமாகக் காணப்படும் குறிப்புக்களில் பெரும்பாலானவை, தந்தையாரின் மரணத்திற்குப் பிறகு நிகழ்ந்தவையாகத்தான் இருக்கவேண்டும். என்று தீர்மானிப்பதற்குப் போதிய இடமுண்டு.

## காரணம் என்ன?

"இமாம் முஹம்மது பாகிர் அவர்களின் மரணத்திற்குக் காரணம் என்ன? என்ற கேள்விக்குப் பெரும்பாலான வரலாற்று நூல்களில் தெளிவான விடை காணப்படவில்லை. என்றாலும், "ஸிந்தகானி இமாம் ஜ.்.பர் சாதிக்" என்ற பாரசீக நூலில் ஒரு காரணம் காட்டப்படுகிறது.

"ஹிஷாம் செய்த அட்டுழியங்களில் இமாம் முஹம்மது பாகிர் அவர்களுக்கு விஷம் கொடுத்ததும் ஒன்று. தம் சகோதரனின் குமாரரான இப்ராஹிம் பின் வலீத் என்பவர் மூலம் விஷம்

**குணம்**

இமாமவர்களின் குணத்தை போற்றிப் புகழாதவர் எவருமில்லை என்றே சொல்லவேண்டும். தத்துவஞானிகள், தர்க்க மேதைகள், ஆத்மீகத் தலைவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து இமாமவர்களைப் பாராட்டினார்கள், இன்றைக்கும் பாராட்டுகிறார்கள்.

எவ்வித வேறுபாடும் இல்லாமல் அவர்கள் போற்றப்பட்டார்கள். கருத்து வேற்றுமைக்கே வழியில்லாதவாறு அனைவரும் அவர்களைப் பின்பற்றினார்கள்! என்று "தத்கிரதுல் அவ்லியா" என்ற நூல் குறிப்பிடுகிறது.

இமாம் சாதிக் அவர்களின் குணங்களில் மிக முக்கியமானது தயாள சிந்தை. இதற்கு எவ்வளவு தூரம் இஸ்லாத்தில் சிறப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதைத் திருக்குர்ஆனின் வசனங்கள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன.

"அனாதைகளைத் திட்டாதீர்., உதவி கேட்பவர்களை விரட்டாதீர். உமது நாயனின் அருட்கொடைகளை எடுத்துரைப்பீராக!" என்று பெருமானருக்கு அருளப்பட்ட இறைக்கட்டளையை இமாம் சாதிக் அவர்கள் அப்படியே பின் பற்றினார்கள். செல்வத்தை சிறிதும் மதிக்காத அவர்கள் கையிலிருந்ததை எல்லாம் மற்றவர்களின் நன்மைக்காகத் தர்மம் செய்தார்கள்.

அவர்களின் வாழ்வில் நடந்த பல சம்பவங்கள் தாராள மனப்பான்மைக்கு சான்றாக உள்ளன. மற்றவர்களுக்கு உதவுவதைத்தான் அவர்கள் குறியாகக் கொண்டிருந்தார்களே தவிர அதனால் ஏற்படும் நன்மை, தீமைகளைக் கூட பொருட்படுத்தவில்லை என்றே தெரிகிறது. கசந்தாலும் உண்மையைச் சொல்லிவிடு என்பது பெருமானாரின் கருத்து, அவர்களின் வழித்தோன்றலில் வந்த இமாம் ஜஃபர் சாதிக் அவர்கள் கசப்பான கட்டத்திலும் உதவி செய்திருக்கிறார்கள்.

அவர்கள் வகுத்த வழியில் பல்லாயிரம் பேர் நடந்தார்கள். இஸ்லாத்தின் வரலாற்றில் தோன்றிய மெய்ஞ்ஞானிகளில் பலர் இமாம் அபூ ஹனீபாவையே தமது தலைவராக இமாமாக ஏற்றுக் கொண்டிருந்தார்கள்.

இமாம் அபூஹனீபாவுக்கு இஸ்லாமியச் சட்டத்தில் தேர்ச்சியுண்டு. தெளிந்த மனமும் உயர்ந்த கண்ணோட்டமும் பெற்றிருந்த அவர்கள் இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்களின் நட்பை மட்டுமின்றி, அவர்களின் திறமையையும் உயர்த்தி மதித்திருக்கிறார்கள். அவர்களிடம் தாம் மாணாக்கராக இருந்தது குறித்துப் பெருமைப்பட்டிருக்கிறர்கள்.

"இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்களைவிடச் சிறந்த சட்ட நிபுணர் ஒருவரை நான் கண்டதில்லை" என்று அவர்கள் கூறியிருப்பதை இங்கு நாம் நினைவு கூற வேண்டும்.

இமாம் முஹம்மது பாகிர் அவர்களின் மரணத்திற்குப் பிறகு ஜஃபர் சாதிக் (ரலி) அவர்களுக்கு இமாம் என்று பட்டம் சூட்டப்படுகிறது அல்லவா? அதன்பின் அவர்கள் மதீனாவில் இருந்து மார்க்கப் பணி செய்துகொண்டிருந்தார்கள். இஸ்லாமிய நாடு முழுவதும் அவர்களின் பெயர் பரவியிருந்தது. அவர்களைச் சந்திப்பதற்காக நாலாபுறமிருந்தும். மக்கள் திரண்டு வந்தார்கள். அவர்களிடம் இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்கள் பேசிய பேச்சுக்களும் இமாம் கூறிய அறிவுரைகளும் வியக்கத் தகுந்தவை. வரலாற்று நூல்களில் அவை நிறைந்து கிடக்கின்றன.

இமாம் ஜஃபர் சாதிக் அவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே நபிப் பரம்பரையின் வழித் தோன்றல் என்று தெரிந்து யோய்விடும்" என்கிறார் அம்ர் பின் மிக்தாம். இவர் இமாமவர்களுடன் நன்கு பழகியவர்.

பர் சாதிக் (ரலி) அவர்களுக்கு 'இமாம்' என்று பட்டம் சூட்டப்படுகிறது. மேற்குறிப்பிட்ட பேச்சின் கருத்தோட்டத்தை வைத்துப் பார்க்கும்போது, சமுதாயத் தலைவர் என்ற பதவிக்கு வந்த பிறகுதான் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள் இப்படிப் பேசியிருக்க வேண்டும் என்று தீர்மானிக்க வாய்ப்புண்டு. இவர்கள் வாழ்ந்த சமகாலத்தில் அறிவிலும், ஆற்றலிலும் மிக ஏற்றமானவர்களாக கருதப்பட்டார்கள். இவர்கள்பற்றி மகான் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் தனது ஹதியா சரீப் எனும் நூலில் அயிம்மதுல் முஜ்தஹிதீன் எனும் பணிரண்டு இமாம்களைக் குறிப்பிடும்போது இமாம் ஜ.பர் சாதிக் அவர்களை 6ம்மவராக குறிப்பிட்டுள்ளார்கள்.

இலங்கையில் உள்ள அனேக சாதாத்மார்கள் இவர்களின் வழித்தோன்றலில் வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## இமாம் ஜ.ஃபர் சாதிக் அவர்களும் இமாம் அபூ ஹனீபா அவர்களுக்குமிடையே ஏற்பட்ட முதல் சந்திப்பு.

பிற்காலத்தில் 'ஹனபீ' என்று பெரும் புகழ்பெற்ற இமாம் அபூ ஹனீபா அவர்களுக்கும் இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்களுக்கும் இடையில் நிகழ்ந்த முதற் சந்திப்பு, இமாமவர்களின் வரலாற்றில் முக்கியமான ஒன்று. தம் தந்தையாரிடமிருந்து பெற்றிருந்த அறிவுத் திறமையை இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள் இங்கு இமாம் அபூ ஹனீபா மீது பிரயோகிக்கிறார்கள். இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்களின் கருத்தையும் கண்ணோட்டத்தையும் பார்த்த இமாம் அபூ ஹனீபா பெரிதும் ஆச்சரியப்படுகிறார்கள்.

கலந்துரையாடலில் ஆரம்பமான இந்த நட்பு இறுதிவரை வளர்கிறது. பின்னர் இமாம் அபூ ஹனீபா, இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்களின் மாணவர்களில் ஒருவராகிவிடுகிறார்கள். இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்களின் மாணாக்களிலேயே இமாம் அபூஹனீபாவுக்கு எதிர்காலத்தில் தனிச்சிறப்புக் கிடைத்தது.

“அல்குர்ஆனை அடிப்படையக வைத்து மக்களுக்கு வழிகாட்ட வேண்டிய மகத்தான பொறுப்பு அவருக்குக் கொடுக்கப்படுகிறது. தன்னலத்தைத் துறந்து பொதுநலத்துக்காகத் தம்மை அர்ப்பணிக்க வேண்டிய கண்ணான கடமை அவர் தலைமையில் விழுகிறது.

“இமாம் எனப்படும் தலைவர் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர். மக்களுக்கு வாழ்வுக்காகவும் இருளுக்கு ஒளியாகவும் இஸ்லாத்திற்கு துணையாகவும் நின்று செயல்படவேண்டியவர். அவர் நாட்டுக்கு நல்லொளியும் வீட்டுக்கு விளக்கொளியுமாகத் திகழ்கிறார்.

“இப்படிப்பட்ட உண்மையான தலைவர் எப்போதும் இறைவனின் நிழலில் இருக்கிறார்கள். அவர்களை எப்பொதும் இறைவன் கண்காணிக்கின்றான்.

“இவ்வாறான உண்மைத் தலைவர்கள் ஆரம்பத்திலிருந்தே தோன்றி வந்திருக்கின்றார்கள். ஆதம் நபியின் சந்ததியில் சிலர் தோன்றினார்கள். நூஹ் நபியின் சந்ததியில் வேறு சிலர் உருவானார்கள். இப்ராஹிம் நபியின் சந்ததியில், பெருமானார் தோன்றினார்கள். பெருமானாரின் சந்ததியிலிருந்து இன்று சமுதாயத் தலைவர்கள் உருவாகிக்கொண்டிருக்கின்றார்கள்.

**“நிச்சயமாக ஆதத்தையும், நூகையும் இப்றாகீம் சந்ததியாரையும், இம்றானின் சந்ததியாரையும் அல்லாஹ் அகிலத்தார் அனைவரையும் விட மேலானவர்களாய்த் தேர்ந்தெடுத்தான்.”**

*3-33 அல்குர்ஆன்.*

முஹம்மத் (ஸல்) அவர்களிடம் சந்ததியார் பற்றிவினவப்பட்டபோது ஆல இப்றாஹீம், ஆல இம்றான் எனப்படுபவர்கள் இப்றாஹீம், இம்றான் முஹம்மத் (ஸல்) ஆகியோரின் குடும்பத்தினரின் மு.ஃமீன்களாவர். என பதிலளித்தார்கள் அறிவிப்பாளர் அப்பாஸ் (ரலி) ஆதாரம் துர்றுல் மன்சூர் இமாம் சுபூத்தி.

இப்படி இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள் பேசுகிறார்கள். இமாம் முஹம்மது பாகிர் அவர்களின் மறைவுக்குப் பின்னர் ஜ.ஃ.

ஆண்டுகள் ஏறத்தாழ 33.

பாட்டனாருடன் இமாம் ஜ.'.பர் சாதிக் (ரலி) அவர்கள் கழித்த காலம் பதினோர் ஆண்டு, பத்து மாதம், எட்டு நாட்கள். அன்றிலிருந்து இமாம் முஹம்மது பாகிர் அவர்கள் தம் குமாரரை முறைப்படி வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். ஒழுக்கம், பணிவு, பொறுமை, நம்பிக்கை, இறையச்சம் முதலான பண்புகளைப்பற்றியெல்லாம் அவர்கள் தம் குமாரருக்குப் போதித்தார்கள். திருக்குர்ஆனில் உட்பொருள்கள், மார்க்கத்தில் மறைந்திருக்கும் மர்மங்கள் ஆகியவற்றை எல்லாம் சிந்திப்பதற்குத் தகுந்தபடி எடுத்துக் கூறினார்கள். மொத்தத்தில் நபிப் பரம்பரையினருக்குத் தலைவர் என்ற முறையில் தாம் வகித்த பொறுப்புக்குத் தம் குமாரரை அவர்கள் தயார் செய்துவிட்டார்கள்.

இந்த வகையில் இமாம் முஹம்மது பாகிரை இமாம் சாதிக் அவர்களின் இரண்டாவது ஆசிரியர் என்று குறிப்பிடலாம்.

இப்படி தந்தையாருடன் அவர்கள் கழித்த காலம்: பத்தொன்பது ஆண்டு, பத்து மாதம், பன்னிரண்டு நாட்கள்.

## மக்கா யாத்திரை

ஹிஜ்ரி 106ல் இமாம் ஜ.'.பர் சாதிக் (ரலி) அவர்கள் தம் தந்தையாருடன் 'ஹஜ்'ஜ•க்குச் சென்றார்கள். அப்போது அவர்களுக்கு வயது 26.

மக்கா நகரில் ஒரு கூட்டத்தில் இமாம் ஜ.'.பர் சாதிக் (ரலி) அவர்கள் பேசினார்கள். "புகழனைத்தும் இறைவனுக்கே உரித்தானது. அவன் உண்மையின் அடிப்படையில் பெருமானாரைத் திருத்தூதராக அனுப்பினான். அதன் மூலம் எங்களுக்கு தனிச் சிறப்பை ஏற்படுத்தினான்" என்று ஆரம்பித்த அந்தப் பேச்சு பெரும்பாலானோரைக் கவர்ந்தது.

பரம்பரையில் தோன்றியவர் என்று அர்த்தம்.

தாய்வழியில் அவர்கள் முதல் கலீபாவான ஆபூபக்கர் சித்தீக் அவர்களுடன் தொடர்பு கொள்கிறார்கள். ஜ.ஃ.பர் அவர்களின் அன்னையார் உம்மு பர்வா அவர்களாகும். இவரது தந்தை காசிம். காசிமின் தந்தையார் முகம்மது. இவர், அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் குமரர்களில் ஒருவர்.

ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களின் அன்னையாரான உம்மு பர்வாவின் தாயார் அஸ்மா. இவர் அப்துர் றஹ்மானின் குமாரி. அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் குமரர்களில் இவர் மற்றொருவர்.

இப்படிப் பார்க்கும்போது, இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்கள் தாய் வழியில் இரண்டு விதங்களில் அபூபக்கர் சித்தீக்குடன் தொடர்பு கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

## தந்தையாரும் பாட்டனாரும்

இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களை முறைப்படி வளர்த்துப் பக்குவப்படுத்திய பெருமையில் பெரும்பகுதி தந்தையாரையும் பாட்டனாரையுமே சேர்கிறது. "ஒரு மனிதனின் குழந்தைப் பிராயமும் வாலிபப் பருவமும சிறப்பான சூழலில் அமைந்துவிட்டால், அவனுடைய எதிர்கால வெற்றிக்கு உத்தரவாதம் கொடுக்கலாம்" என்ற கருத்து எவ்வளவு உண்மையானது என்பதை இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களின் வாழ்விலிருந்து நாம் உணரலாம்.

பாட்டனார் ஸைனுல் ஆப்தீன் அவர்களுடனும், தந்தையார் முகம்மது பாகிர் அவர்களுடனும் இமாம் சாதிக் அவர்கள் செலவிட்ட ஆண்டுகளில் எத்தனையோ சம்பவங்கள் நடந்தன. அவை ஒவ்வொன்றும் இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களின் எதிர்கால வாழ்வுக்கு அஸ்திவாரம் போட்டன. இப்படிக் கழிந்த

'ரவ்லத்துல் வாயிலீன்', 'அலமுல் வரா' ஆகிய நூல்களின் ஆசிரியர்கள் "ஹிஜ்ரி 83, ரபியுல் அவ்வல், திங்களிரவு, பிறை 17" என்று குறிப்பிடுகிறார்கள்.

"ஜ.ஃபர் என்பது சொர்க்கத்திலுள்ள ஓர் ஆற்றின் பெயர்"

## சிறப்புப் பெயர்கள்

இமாமவர்களின் முழுப்பெயர் அபூ அப்தில்லாஹ். ஜ.ஃபர். அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புப் பெயர்: சாதிக். உண்மையாளர் என்பது பொருள். பெயருக்குத் தகுந்தாற்போல் அவர்களின் வாழ்வும் வாக்கும் உண்மையின் அடிப்படையிலேயே அமைந்திருந்தன.

இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்களுக்கு வேறு சில பெயர்களும் இருக்கின்றன. ஸாபிர், பாஸில், தாஹிர் ஆகிய பெயர்களை இங்கு குறிப்பிடலாம். முறையே இவற்றின் பொருள்: பொறுமையாளர், உயர்ந்தவர், தூய்மையானவர். இந்த சிறப்புப் பெயர்கள் அனைத்தையும்விட சாதிக் என்ற பெயரே பிற்காலத்தில் பெரிதும் பிரசித்தம் அடைந்தது. அவர்களிடமிருந்து கிடைத்த வைத்திய ஆலோசனைகளை எல்லாம் ஒன்றுதிரட்டி நூலுருக் கொடுத்த ஆசிரியர் அதற்கு இப்படிப் பெயரிட்டிருக்கிறார். 'சாதிக்கின் வைத்தியம்'. பிற்காலத்தில் சாதிக் என்ற பெயர் எவ்வளவுபிரசித்தம் அடைந்தது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள் நபிப் பரம்பரையில் தோன்றிய பன்னிரண்டு இமாம்களில் ஆறாவதாக வருகிறார்கள். அவர்களின் தந்தையாரான முஹம்மது பாகிர் அவர்கள் இமாம் ஸைனுல் ஆ.பிதீனின் புதல்வர். இவர், தியாகத் திலகம் இமாம் ஹுஸைன் (ரழி) அவர்களின் குமாரர்.

எனவே, இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள் தந்தை வழியில் 'ஹுஸைனீ' என்று அழைக்கப்படுகிறார்கள். ஹுஸைனின்

முஹம்மது நபி (ஸல்) அவர்களின் பேரரான இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள் கர்பலாவில் உயிர்நீத்து ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. மதீனாவில் இமாம் ஸைனுல் ஆப்தீன் மார்க்கப் பிரச்சாரம் செய்து கொண்டிருந்தார்கள். இமாம் ஹுசைன் அவர்களுக்குப் பின்னர் "இமாம்" என்ற பதவிக்கு வந்த ஸைனுல் ஆப்தீன் அரசியலைவிட்டுத் தனித்து நின்று இறைபணி புரிந்துகொண்டிருந்தார்கள். அவர்களின் குமாரரான முஹம்மது பாகிரும் மதீனாவிலேயே வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் மதீனமா நகரில் நிறுவப்பட்ட அரசு இப்போது திமஷ்கிலிருந்து ஆட்சி செய்து கொண்டிருந்தது. உமையாக்களில் ஒருவரான அப்துல் மலிக் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தார். நபி (ஸல்) அவர்களின் காலத்திற்கு முன்னாலிரந்தே உமையாவின் சந்ததியினருக்கும் ஹாஷிமின் சந்ததியினருக்கும் இடையில் நிலைத்திருந்த பகைமைக்கு தூபம் போடுபவர்கள் இஸ்லாமிய நாடு முழுவதிலும் காணப்பட்டார்கள். அபூபக்கர் சித்தீக், உமர் (ரலி) முதலான நபித் தோழர்கள் சென்ற வழியை மறந்துவிட்டு புதியதொரு வழியைத் தேர்ந்தெடுத்துச் செயல்பட்ட உமையாக்கள் கண்டனத்திற்குள்ளானார்கள். அவர்களைத் திருத்தவேண்டிய மகத்தான பொறுப்பு அப்போதைய சமுதாயத் தலைவர்களுக்கு ஏற்பட்டிருந்தது.

## பிறப்பு

இந்த காலகட்டத்தில்தான் இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்கள் மதீனாவில் பிறந்தார்கள். அப்போது ஹிஜ்ரி 83. அவர்கள் பிறந்த நேரம், வெள்ளிக்கிழமை காலை சூரியோதயத்திற்குச் சிறிது முன்னால்.

இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்கள் ஹிஜ்ரி 83ல் ஒரு திங்களிரவு பிறந்ததாக 'மனாகிபுல் அயிம்மா' என்ற நூலின் அசிரியர் குறிப்பிடுகிறார்.

## இமாம் ஜ.ஃபர் சாதிக் (ரலி) அவர்கள்

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும் அன்னவரின் பரிசுத்த குடும்பமாகிய அஹ்லுல்பைத்கள் மீதும் சாந்தியும், அருளும் உண்டாவதாக.

إِنَّمَا يُرِيدُ اللَّهُ لِيُذْهِبَ عَنكُمُ الرِّجْسَ أَهْلَ الْبَيْتِ
وَيُطَهِّرَكُمْ تَطْهِيرًا ﴿٣٣﴾ الاحزاب ٣٣

**'ஓ அஹ்லுல் பைத்தினரே உங்களைவிட்டும் (சகல) அசுத்தங்களையும் நீக்கி, உங்களை முற்று முழுதாகத் தூய்மையாக்கவுமே அல்லாஹ் விரும்புகின்றான்.'**

*அல்-குர்ஆன் 33.33.*

நான் உங்கள் மத்தியில் இரண்டுவிடயங்களை விட்டுச்செல்கின்றேன் அவ்விரண்டு விடையங்களையும் பின்பற்றிவாழும் காலம் எல்லாம் நீங்கள் வழிதவறமாட்டீர்கள். ஒன்று அருள்மறை அல்-குர்ஆன். இரண்டாவது எனது (குடும்பம்) அஹ்லுல் பைத்கள் ஸஹீஹுல் முஸ்லிம் அத்.7 பக்.127 முஸ்னத் அஹ்மத் அத்.7 பக்.36 பைஹகீ அத்.2 பக்.148 தாரமீ அத்.2 பக்.308 கன்சுல் உம்மால் அத்.1 பக் 45

# ஓர் அறிமுகம்

பல நூற்றாண்டு காலமாக நமது ஈழத் திரு நாட்டின் பல பாகங்களிலும் இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களின் வரலாற்றுச் சரித்திரங்களை, இஸ்லாத்திற்கு அவர்கள் ஆற்றிய பணிகளை, இப்பணியினால் முஸ்லிம் உம்மத்துகள் அடைந்த பயனைத் தொகுத்து எழுதப்பட்ட இமாம் ஜ.ஃ.பர் சாதிக் மௌலூத் ஓதப்பட்டு இமாமவர்களின் புகழ் பாடப்பட்டு வருவதும், இதனால் நம் சமூகம் பாரிய பலன்களைப் பெற்று அல்லாஹ்வின் அருளையும், பறக்கத்தையும் பெற்று வந்துள்ளதை நினைவு கூறவேண்டும்.

இலங்கைக்கு வருகை தந்த ஸாதாத் மார்களில் அதிகமானோர் இமாம் ஜ.ஃ.பர் சாதிக் (ரலி) அவர்களின் வளித்தோன்றல்களே! என்ற உண்மையை எவராலும் மறுக்க முடியாது. இவ்வாறான வளித் தோன்றல்களால் நாடு முழுவதும் இஸ்லாமிய, ஈமானிய ஆண்மிகப் பணிகள் நடை முறைப்படுத்தப்பட்டு உண்மையான சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைகள், வளிமுறைகள் பின்பற்றப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுவது குறிப்பிடக்கூடிய ஒன்றாகும்.

கொழும்பு புதிய சோனகத் தெரு சாலிஹிய்யா தைக்காலில் அடங்கப் பெற்றிருக்கும் மேன்மைமிகு மகான ஹழ்ரத் ஷைக் அப்துல் கனீ சாஹிப் வலியுல்லாஹ் அவர்களும், இமாம் ஜ.ஃ.பர் சாதிக் அவர்களை ஷைகாகக் கொண்டு செயல்பட்டவர்களே. எனவே தான் இமாம் ஜ.ஃ.பர் சாதிக் அவர்களின் வாழ்க்கை வரலாறுகளில் சிலதை சுருக்கமாக வெளியிடுவதில் எமது தைக்கா மகிழ்ச்சியுடன் பங்கெடுத்துக் கொண்டது.

அல்லாஹ் நம் அனைவரையும் நபி வழி நடந்த சாதாத் மார்களை கௌரவித்து அவர்களின் அடிமேல் அடிவைத்து வாழவைப்பதன் மூலம் ஈருலக பாக்கியங்களைச் சொரிவானாக! ஆமீன்.

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர்ரஹீம்

## ஆசிச் செய்தி

இமாம் ஜ.்.பர் சாதிக் (ரழி) அவர்களின் வாழ்க்கை வரலாற்றை தொகுத்து நூலாக வெளியிடும் முயற்சி மிக மகிழ்சிக்குரியதும் இக்காலத்தின் தேவைகளில் ஒன்றுமாகும்.

சிக்கல்களும், பிரச்சினைகளும் நிறைந்த இக்காலத்தில் அஹ்லுல்பைத்களாகிய றசூல் (ஸல்) அவர்களின் குடும்பத்தை பற்றி அறிந்து அவர்களை பின்பற்றவும் அதன் மூலம் அவர்களின் பரக்கத்தை பெற்றுக் கொள்ளவும் அல்லாஹ்வின் நெருக்கத்தை அடைந்து கொள்வதற்கும் இவ்வாறான நூல்கள் துணைசெய்யும் என எதிர்பார்கின்றேன்.

அல்லாஹ் எம் அனைவருக்கும் அஹ்லுல்பைத்களின் பரக்கத்தைப் பெற்றுக் கொள்ளும் பாக்கியத்தை தந்தருள்வானாக.

ஆமீன்.



ASSAYYID FATHHULLA MUTHUKOYATHANGAL M.F.F.
*Kazi & Principal*
*S.M.A. College Amini*
132, New Moor Street, Colombo 12.

